[7th February 1959

வதுடன், அங்கெல்லாம் அவ்வப்போது முன் எச்சரிக்கை நடவடிக்கைகள் எடுக்கப்படுவதற்கு வகை செய்யும் உத்தரவு ஒன்றை சர்க்கார் பிறப்பிக்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : காலரா பரவுவதற்கு முக்கிய காரணம் நல்ல குடிதண்ணீர் இல்லாததுதான். இப்போது ஆங்காங்கே பாதுகாக்கப்பட்ட நல்ல குடிதண்ணீருக்கு வசதி செய்யப்பட்டு வருகிறது. இருந்தாலும் நல்ல குடிதண்ணீர் இல்லாத சில இடங்களில் இந்த நோய்கள் தோன்றுகின்றன. இவைகள் தோன்றிப் பரவுவது தெரிந்ததும் சுகாதார இலாகாவினர் மக்களுக்கு தடுப்பு ஊசி போடுகிறார்கள். இன்னும், மற்ற நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டுத் தான் வருகின்றன.

### *Gramasevaks*

*116 *Q.*—SRI C. MUTHIAH : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) 1957–58-ல் கிராம சேவக் பயிற்சியில் தேறாததனால் எத்தனை பேர் வேலைக்கு எடுத்துக் கொள்ளப்படவில்லை ?

(ஆ) அவர்கள் நிலை என்ன ?

(இ) அவர்கள் உபகாரச் சம்பளம் திரும்ப வசூலிக்கப்படுகிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) 15.

(*b*) They will not be employed as Gramasevaks and they will have to seek someother employment.

(*c*) No, Sir.

SRI C. MUTHIAH : இவர்களில் 1½ வருட காலத்திற்கு மாதம் 45 ரூபாய் ஸ்டைபெண்ட் சர்க்காரிடமிருந்து பெற்றுக்கொண்டு பயிற்சி பெற்ற பிறகு பயிற்சியில் தேறாதவர்களை, அவர்கள் சொந்தப் பணத்திலேயே படிப்பதாயிருந்தால் மீண்டும் ஒரு முறை படிப்பதற்கு அனுமதிக்கலாம். அவ்வாறு படிப்பவர்களில் பரீட்சையில் தேறுபவர்களுக்கு கிராம சேவக் உத்தியோகம் கொடுக்கலாம், தேறாதவர்களுக்கு "ஸ்பின்னிங் ஆர்கனைசேஷன்" போன்ற ஸ்தாபனங்களில் உத்தியோகங்கள் கொடுக்கலாம். அரசாங்கம் அவ்வாறு செய்யுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அது ஆலோசனை செய்யப்பட வேண்டிய விஷயம். இது சம்பந்தமாக இப்போது ஒன்றும் சொல்வதற்கில்லை.

### *Money order jorms, post cards and postal orders*

* 117 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Chief Minister be pleased to state with reference to Question No. 439 answered on 28th March 1958—

(*a*) whether the Government are aware that the money order Forms, Post-cards and Postal Orders are still printed only in Hindi and English; and

(*b*) if so, whether the Government propose to make further representation to the Union Government in the matter?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) It has been ascertained from the Postal department that Money Order forms and postal order forms now in use are only in English, but that post cards printed in Hindi have been supplied to Post offices in this State.

(*b*) No, Sir.